# நடராஜ உபாசனை

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்






அன்பு நிலயம்
இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா

# பதிப்புரை

"நடராஜ உபாசனை" என்னும் இந்நூலின் மூன்றாம் பதிப்பைத் தில்லையப்பன் திருவடிகளில் வைத்து வணங்குகிறோம்.

தமிழர், தமிழ்மந்திரஞ் சொல்லியே கடவுளை வழிபடவேண்டும்; அது, தமிழுக்கு ஒரு புதிய சக்தியைத் தரும்; அதனால், தமிழ் பரவிப் பொலியும் என்ற கருத்துடனேயே, இந்நூலை வெளியிடுகின்றோம். நடராஜப் பெருமானின் திருவடிப் பேற்றைத் தமிழர் அனைவரும் அடையவேண்டுமெனக் கருதி, இவ்வுபாசனை மந்திரத்தை யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள் அருளினார்கள்; அவர்களுக்கு எமது நன்றி உரியதாகுக.

நடராஜ உபாசனையைக் கருத்துடன் செய்யும் அன்பர் உள்ளத்தில் பேரின்பம் பொங்குவது உறுதி.

இராமச்சந்திரபுரம்,
25—5—1946.
} அன்பு நிலயத்தார்.

ரு அ-(கச)-ந-சு

## பொருளடக்கம்


| எண் | | பக்கம் |
|---|---|---|
| பதிப்புரை | ... ... | 3 |
| கீர்த்தனம் : | | |
| க. பொதுநடத் தந்தை | ... ... | 5 |
| உ. இதயக் கதவைத் திறந்தருள்! | ... | 6 |
| சிற்சபேசன் | ... ... | 7 |
| நடராஜ உபாசனை : | | |
| க. தில்லையப்பன் வணக்கம் | ... ... | 13 |
| உ. நடராஜா அர்ச்சனை | ... ... | 15 |
| ங. ஆராதனை | ... ... | 20 |

# நடராஜ உபாசனை



## ௧. பொதுநடத் தந்தை

(கீர்த்தனம்)

காம்போதி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

இதய வெளியினிலே பொதுநடம் புரிகுவாய்
ஏகாம் பரனே — சிவனே என் (இதய)

அநுபல்லவி

பதசாரி தோறுமுன் அதிர்சிலம் பொலி கேட்டுப்
பரமா னந்தம் பெறுவேன் — சிற்சபேசா என் (இதய)

சரணம்

எனதென் றகங்கரித்தும் மனது பணிந்து வர,
இருவினைக் கட்டுகள் இற்றுச் சுயேச்சை பெற,
அனவர தமும்உனை நினைந்து கசிந்துருகி,
அத்தாவுன் மலரடிப் பித்தனாய் வாழ்ந்திட (இதய)

ஹரஹர ஹரவென்றென் ஆர்வங்கள் கோஷிக்க
அன்பு மகர வீணை தும்தும் என வாசிக்க
ஒரசிலுன் பேரின்பம் சிலிர்த்து நடமாட,
செந்தமிழ் வாணியுன் மந்திரப் பொருள் பாட (இதய)

## உ. இதயக் கதவைத் திறந்தருள்!

குந்தலவராளி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

இதயக் கதவைத் திறந்தருள்!
ஈசனே, அன்பர் நேசனே—என் (இதய)

அநுபல்லவி

பதமலரி லேல வாழ்வின் பாரத்தை வைக்கவே
சுதந்தர மாகவுன் சுகத்தினிற் சொக்கவே (இதய)

சரணம்

காரினை உலைப்பிடும் காற்றினைப் போலவே,
கமலத்தை மலர்த்திடும் கதிரொளி போலவே,
பூரண மாகவுன் பூங்கரத் தாலே
புண்ணியனே – காருண்ணியனே என் (இதய)

இருள் மன மாயஞ்செய் இருவினை நலியவே,
இகபர சுகமிந்தச் சகமெல்லாம் பொலியவே,
அருட்பெருஞ் சோதிசத் தானந்தம் பொழியவே
அன்புவெள்ளம் பெருகி ஆருயிர் செழிக்கவே (இதய)

—சுத்தானந்தம்

# சிற்சபேசன்

சிதம்பரத்தை நினைத்தால் உள்ளம் சிலிர்க்கிறது! தத்துவ வடிவான அந்தச் சிற்பச் செல்வம் எதிரே நிற்கிறது; அதிற் பரவெளி தோன்றுகிறது; சிற்சபை விளங்குகிறது; அங்கே ஞானநடம் புரியும் சிற்சபேசன், நடராஜப்பெருமான் திருவுரு, நமது உள்ளத்தில் நடம் புரிகிறது. அருவும், உருவும், அருவுருவுமான மூன்று தன்மையிலும் நாம் இறைவனை அங்கே நினைக்கிறோம், துதிக்கிறோம்; காண்கிறோம்!

பொதுநடத் தந்தையின் முன்னிலையில் நின்றால், ஆ! ......எத்தனை இன்பச் சிந்தனைகள் உள்ளத்தில் வெள்ளம் போலப் பொங்குகின்றன! நமது தமிழும், நந் தமிழ்ப் பெரியார் பெருமையும், நமது தமிழ் மறையின் சிறப்பும், நம்முன் கதிரோங்கி விளங்குகின்றன! பதஞ்சலி, வியாக்கிரபாதர், திருவுடை அந்தணர், உபமன்யு, வியாசர், சுகர், சௌனகர், சூதர் முதலிய முனிவர் கூட்டம் நம்மைச் சுற்றி நிற்பதுபோல் உணர்கிறோம்; திருமூலர், திருநீலகண்டர், நந்தனார், சேக்கிழார் முதலிய தெய்வப் புலவரின் அன்புக் கனலில் மூழ்குவது போல் உணர்கிறோம்; ஞானசம்பந்தரும், அப்பரும், சுந்தரரும் பாடிய தேவாரத் திருமறைகள் நம்மைச்சுற்றி ஒலிக்கும்போது......ஆ! அந்த இன்பத்தைச் சொல்ல வாயுரையுண்டோ? பொன்னம்பலக் கிழவராக வந்து, தமிழ்த் திருவாசகத்தை ஆர்வமுடன் எழுதிய

அருளப்பனை நினைக்கிறோம். தமிழ்ப் பாசுரத்தில் அவனுக் கிருக்கும் ஆர்வந்தான் என்னே!

அத்தகைய ஆர்வம், இன்று நம் தமிழரைப் பற்றாதா வென்று வேண்டுகிறோம். பொன்னம்பலப் படியில் சிவ பிரானே வைத்த திருவாசகத்திற்கு "இதுதான் பொருள்" என்று சோதியாய் அவனுள்ளே மறைந்த மாணிக்கவாசகரின் பதியன்பை யுன்னி, நம் உள்ளம் கரைகிறது.

"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென்று அவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே!"

என்று நம்மை அறியாமற் பாடுகிறோம்!

சிதம்பர ரகசியத்தை நன்றாக அறிவோமானால், நமது உடலமே திருக்கோயிலாகும்; உள்ளமே சிற்சபையாகும்; இறைவனே, அங்கே திருவடி தூக்கி நடனமாடுவான்; அவனது துரியானந்தத் தாண்டவத்தை அருள்விழியால் உணர்வோம்; ஆறுகளெல்லாம் கடலையே நோக்குமாறு போல, உலகிலுள்ள ஆன்மாக்களெல்லாம், சமயங்களெல்லாம், ஒரே அருளிறைவனை நோக்கிச் செல்லக் காண்போம்; 'சாதி சமய வேறுபாடுகளெல்லாம் மாந்தர் மதிமயக்கம்; இறைவன் ஒருவன்; உயிர்கள் அவனது திருமேனி' என்று காண்போம்; பொதுநடத் தந்தையாகிய அருளிறைவன். சுத்த சமரச சன்மார்க்க நித்திய வடிவாகக் காட்சியளிக்கிறான். உலகெல்லாம் ஓதி

யுணர்ந்து வழிபடத்தக்க ஒருவன் எம் அருளப்பன். நம் செந்தமிழ்ச் சிற்பிகள் அப்பனுக்கு எவ்வளவு அழகான வடிவமைத் திருக்கின்றனர்! அஃதோர் ஓவியக் காவியமே! அதைக் கண்டதும்,

"பேதமுறு மெய்ப்போத வடிவ மாகிப்
பெருங்கருணை நிறம்பழுத்துச் சாந்தம் பொங்கிச்
சீதமிகுந் தருள்கனிந்து கனிந்துமாறுச்
சின்மயமாய் நின்மலமே மணந்து, நீங்கா
ஆதரவோ டியல்மௌனச் சுவைமேற் கொண்டு,
ஆனந்த ரசமொழுகி யன்பா லென்றும்
சேதமுறு தறிஞருளந் தித்தித் தோங்குஞ்
செழும்புனிதக் கொழுங்கனியே தேவ தேவே!"

என்று நம் ஆர்வம் வாய்விட்டு அலறுகின்றது!

"அம்பலத்தரசே, அருமருந்தே, ஆனந்த விண்ணே, சற்குரு மணியே. ஆணவமாகிய முயலகனை மிதித்து நசுக்காய்; மான்போலத் துள்ளும் மனத்தை யடக்காய்; துரியந்தன்னில் தூக்கிய திருவடியால் என்னைக் காவாய்; மனத்தின் கனவொழித்து துரியுங் கடந்த ஞானானந்த மருள்வாய்! ஐயனே, என் அப்பனே, நீயே அனைத்தும்; ஐந்தொழிலும் நின் ஆடலே! நினது டமரகநாதம், ஒளியும் மொழியும் அளித்தது. நீ ஓங்காரத்தால் உலகைப் படைத்தாய்; ஞானக்கனலை இடக்கரந் தாங்கினை. அக் கனலில் எனது மடமை, பொய்மை, அகந்தை, ஐயம், அச்சம் எல்லாம் அழிக! நினது நித்திய உபசாந்தக் கரங்களால் என்னை ஆசிர்வதிப்பாய்; அபயக் கரத்தால் அச்சந் திராய்! என் அன்பிற் கலந்தொளிரும் அருளமுதே,

நினது கிரியாசக்தியான கங்கை பாய்ந்து, என் வாழ்வைப் பேரின்பச் சோலையாக்குக! சிவானந்தமாகிய சந்திரன் என் உள்ளத்தில் உதயமாகி, என் இருளை விழுங்குக! தலைவனே, என் அகந்தைப் புலியைக் கிழித்து, அதன் உரியை நீ யணி! பாசவெறிகளும், வீரியத் தினவுகளும் எரிந்து சாம்பலான என் யாக்கைத் தில்லைவனத்தில், என் இதயச் சிற்சபையில், சச்சிதானந்தத் திருநடனம் புரிவாயாக! அப்பனே,

"பொங்குபல சமயமெனும் நதிக ளெல்லாம்
புகுந்துகலந் திடநிறைவாய்ப்
பொங்கி யோங்கும்
கங்குகரை காணாத கடலே, எங்குங்
கண்ணாகக் காண்கின்ற
கதியே, அன்பர்
தங்கநிழல் பரப்பிமயற் சோடையெல்லாந்
தணிக்கின்ற தருவே, பூந்
தடமே, ஞானச்
செங்கமல மலரவரு மதியே, எல்லாஞ்
செய்யவல்ல கடவுளே!
தேவ தேவே!"—

என்று அடியார் மனமுருகும் நின் திருச் சந்நிதியே எனது பேரின்ப வின்னாகும்!

நடராஜ உபாசனைக்கு, இந்த அர்ச்சனை மாலை பயனாகும்: இறைவனைப் போற்றிப் புகன்று, செபித்துச் சிந்தித்து, பாடி ஆடி, அர்ச்சித்து வந்தித்துச் சரண் புகுந்து, அருளும் அறிவும், அன்பும் இன்பமும் வினை

வெற்றியும், சுத்தாத்ம சித்தியும், எல்லாச் செல்வமும் பெற இப் பாமாலை வழிகாட்டும்.

என் உள்ளமன்றில் ஒருகணமும் அகலாதொளிரும் அந்தச் சிற்சபேசனை அர்ச்சிக்கவே, இப் பாமாலையைத் தொடுத்தேன். அன்பர் வேண்டுகோள் மீது தமிழருக்கு இதனை அளிக்கிறேன். செந்தமிழ் மந்திரத்தால் தமிழர் அனைவரும் கடவுள் வணக்கஞ் செய்து அருளெய்துக. ஓம் நடனஜோதி!

— சுத்தானந்த பாரதி.

உ

# நடராஜ உபாசனை

---

## ௧. தில்லையப்பன் வணக்கம்

### க. காப்பு

அன்பு நடராஜன் அன்பை விரும்பியே
இன்ப நடனம் இயற்றுகிறான்—அன்புள்ளம்
கொண்ட பொருளும், குறிப்பும், அருட்பெரியார்
விண்டபொருளும்அவனே, வேந்து.

### உ. போற்றி

குருவடி வாக வந்தெமக் கின்பங்
கொடுத்திடுங் குணநிதி போற்றி!
கருணையால் எங்கள் கடமையில் வெற்றி
காட்டிடுங் கடவுளே போற்றி!
ஒருமையில் ஓங்கும் யோகியர் உள்ளே
ஒளிவளர் சுத்தனே போற்றி!
திருவுயர் அன்பு நிலயத்தில் விளங்கும்
சிவநட ராஜனே போற்றி! (1)

உன்னடி நிழலில், உன்னரு ளாலே
உயிர்க்கிறோம் உன்னடி யார்கள்;
உன்னருள் ஆட்சி யுலகெலாம் பரவ,
ஊக்கியெம் வாழ்வினை நடத்தாய்;

அன்னேயே, யெங்கள் அப்பனே, சச்சி
தானந்த குருநட ராஜா
மன்னுயிர் அன்பு நிலயத்தில் விளங்கும்
மங்கல ஜோதியே சரணம்! (2)

ந. பயன்

சிறப்பிலாத் திமை நீங்கும்;
சிந்தையில் வந்தி னிக்கும்;
பிறப்பினேப் பெருமை யாக்கும்;
பேரின்பச் செல்வ நல்கும்;
இறப்பிலா வாழ்வு சேரும்;
இதயம் வாழ் ஈசனுரை
மறப்பிலா தெந்த நாளும்
மனதுற வணங்கு வோமே! (1)

இருளிட ரச்சந் தீரும்;
இகபர சுகங்கள் ஓங்கும்;
திருநெறி வாழ்க்கை சேரும்;
தீயவர் பகைமை வீழும்;
ஒருமையில் உள்ள மொன்றும்;
ஒற்றுமை யுலகி லாகும்;
அருளொளி காட்டுந் தில்லே
அப்பனே வணங்கு வோமால்! (2)

## உ. நடராஜா அர்ச்சனை

### மந்திரம்

ஓம்சிவ குருவே, ஓம்நட ராஜா,
ஓம்பரம் பொருளே. உனைச்சரண் புகுந்தோம்!
வணக்கம், வணக்கம், வாய்மையே வணக்கம்;
வாய்மனங் கடந்த தூயா வணக்கம்;
துரியா காச விரிவே வணக்கம்;
ஞானம் பரந்த வானே வணக்கம்;
சச்சிதா னந்த சற்குரு வணக்கம்;
ஓமில் அகரமாய் ஒலிப்பாய் போற்றி,
சூரிய னுள்வளர் சுடரே போற்றி,
தீயுள் வளருந் தேசே போற்றி!

கார்மழை யாய்வருங் கருணையே போற்றி,
உலகெலாங் கோயில் உடையாய் போற்றி,
உயிரெலாம் உடலாய் உடுத்தாய் போற்றி,
ஒப்புயர் வில்லா ஒருவனே போற்றி,
பன்மையாய் விளங்கும் ஒருமையே போற்றி,
எப்பொரு ளுக்கும் இறைவா போற்றி,
எம்மதத் திற்கும் இசைவாய் போற்றி!
சைவம், வைணம், சாக்தம், கிறிஸ்தவம்,
இஸ்லாம் ஆகிய எம்மதத் திற்கும்
சம்மத மான சாட்சியே போற்றி!

அரன்மால் அயன்குகன் அல்லா பிதாவெனப்
பலமதம் போற்றும் பரமா வணக்கம்!
எனதென தென்றே யிறுமாந் திடர்செய்
வெறியர் காணா வித்தகா போற்றி,
அன்பு காட்டும் அற்புதா போற்றி,
இன்பமே யியல்பாம் ஏகனே போற்றி,
துன்பந் துடைக்குந் துரையே போற்றி,
அடியார்க் குதவும் அருளே போற்றி,
அருவாய், உருவாய், குருவாய், பிறவாய்,
எப்படி யன்பர் எங்கே நினைக்கினும்,

அப்படி யாங்கே யக்கணம் அருளும்
தோன்றாத் துணையே, துரியப் பொருளே,
புலன்களுக் கெட்டாப் போதமே போற்றி!
உயிரும் உடலும், உள்ளும் புறமும்,
உலகும் வானும் இலகும் ஒருவா,
விண்சுட ரான கண்மணி போற்றி!
மொழியெலாம் பிறந்த ஒலியுரு போற்றி!
அகமெலாம் பொலியும் முகமலர் போற்றி,
தீதை யெரிக்குந் தீஞ்சுடர் போற்றி,
வசீகர மான மலர்நகை போற்றி,

கங்கை பொங்குங் கதிர்முடி போற்றி
மதிவளர் சாந்த மலையே போற்றி,
அபய மளிக்கும் அருட்கை பேற்றி,
திருவடி காட்டுஞ் செங்கை போற்றி,

ஆணவம் போகவே யழுந்தடி போற்றி,
உய்யத் தூக்கிய மெய்யடி போற்றி,
இதயந் தோறும் பொதுநடம் போற்றி,
ஐந்தொழில் புரியும் ஐயா போற்றி,
சிற்சபை தன்னிற் செய்திரு நடத்தால்
செகவினை யாடல் செய்வாய் போற்றி!

நெறியிலா நெறியிற் பொறிவழி செல்லும்
அடியரைத் தடுத்தாள் அப்பனே போற்றி!
காணா விடினுங் கண்டுகொண் டிருக்கும்
உயிர்க்குயி ரான உட்பொருள் போற்றி,
அப்பனே, உன்மல ரடியே துணையாய்
உன்னரு ளாட்சி யுலகில் விளங்கவே,
உன்பெயர் சொல்லி, உண்மை யான
பொதுநலப் பணிகள் புரிந்து வருகிறோம்:
நாடு வாழ நல்வினை தொடர்ந்தோம்;
பணியும் பயனும் பரமா உனக்கே!

வெற்றிமேல் வெற்றி விளைப்பாய் போற்றி;
பாதகப் பகைவரும் சாதக மாகத்
திருந்தி வரவே செய்வாய் போற்றி!
அலைமனம் அடங்கும் அமைதி யருளாய்;
சித்தம் நிலைக்கச் சிவக்கன லருளாய்;
பக்தி யோங்கும் பரிசெமக் கருளாய்;
சஞ்சலப் பேய்களைச் சாடி யழித்தே,
கவலைக் கல்லைக் கரைத்தருள் புரிவாய்!

பொறுமைப் புல்லர் வராது விரட்டுவாய் ;
அச்சமும் கலக்கமும் துச்ச நினைவும்,
அரக்கர் வஞ்சமும் அதர்மப் பதர்களின்
சூதும் வாதும் சூழ்ச்சியும் பொய்யும்,
அன்புச் சோலையுள் அணுகா தருள்வாய் !
உன்னருட் பணிக்கே உயிர்க்கும் எங்கள்
உடலும் மனமும் உறுதி பெற்றே,
ஆற்றலும் ஆயுளும் ஆத்தும சக்தியும்,
சுத்தசன் மார்க்கச் சுதந்தர வாழ்வும்,
அருளும், அருட்பணிக் காகிய பொருளும்,
அன்பும் பெருகும் இன்ப மருளாய் !
தியாக வீரராய், யோக தீரராய்,
பூரணம் பெற்றுப் பூரணம் பரப்பும்
அமரராய், உன்னருள் ஆலய மான
உலகிற் கின்ப நலஞ்செய வருளாய் !
தூயனே, உன்னைத் துதித்துப் பணியும்
அடியார் குழுவில் அமர்ந்திட வருளாய் !
அப்பரைப் போலே அன்புப் பணியும்,
பாலரு வாயர் போலவுள் ளறிவும்,
சுந்தரர் போலே செந்தமிழ்ச் சொல்லும்,
'இதுபொருள்' என்றுனை இரண்டறக் கலந்த
மணிவா சகர்போல் மாசறு காதலும்,
* அம்மையார் போலே அருளடி நேயமும்
ஔவையார் போலே செவ்விய மதியும்,

*அம்மையார் : காரைக்கால் அம்மையார்-புனிதவதி.

திருமூலர்போற் செழுந்தவ யோகமும்,
மெய்கண் டார்போல் உய்நெறி விளக்கமும்,
பட்டினத் தார்போற் பழுதறு துறவும்,
வள்ளுவர் போலே இல்லற வாழ்வும்.
தாயுமா னார்போல் ஆய்ந்தவுள் ளமைதியும்,
வள்ளலார் போலே தெள்ளருட் சோதியும்,
ஆழ்வார் போலே அடைக்கல வுறுதியும்,
சங்கரர் போலே சகசாத்ம சித்தியும்,

வியாசர் போலே வியன்பெறு புலமையும்
எங்களுக் கருளியுன் னிச்சையை நடத்தாய்!
அறிவதெல் லாமுன் அருளின் அறிவே ;
புரிவதெல் லாமுன் பூரண சக்தியே ;
நமச் சிவாயவோம் நமச் சிவாயவோம்!
ஆண்டவா, சிற்சபைத் தாண்டவா போற்றி!
ஹர ஹர சங்கர, அம்பலவாணா!
போற்றி போற்றியுன் பூங்கழல் போற்றி!

ஓம் சிவஜோதி!



## ௬. தீபாராதனை

க. உலகெலாம் அன்பு மேவி
ஒருகுல மாக வாழ்க!
கலகமுந் துயரும் வீழ்க!
கருணையுங் களிப்பும் பொங்க,
நலமெலாம் விளைய, ஞான
ஞாயிறு பொலிய நாளும்
இலகுவாய் சுத்த ஜோதி!
இறைவனே போற்றி போற்றி!

உ. ஒள்ளிய தூரிய வானில்
ஓங்கிடுஞ் சோதி வாழ்க!
தெள்ளிய ருள்ளே யன்பாய்த்
திகழ்பரஞ் சோதி வாழ்க!
உள்ளமே தில்லை யாக
ஓமொலி இசைய தாகத்
துள்ளிநன் னடன மாடும்,
தூயசிற் சோதி வாழ்க!
ஓம் ஓம் ஓம்!

முற்றிற்று

